Phone: No. 2241 — தின இதழ் — Regd. No. M. 5934

# ஜனசக்தி

ஆசிரியர்: ப. ஜீவானந்தம்.

மலர் 14] பக்கம் 4 :: விலை அணா 1 [இதழ் 302

சென்னை 22-6-58 விளம்பி, ஆனி-8 ஞாயிறு (வெளியூர் 23-6-58 விளம்பி, ஆனி-9 திங்கள்)

### ருமேனியாவுக்கு இந்திய தூதுகோஷ்டி

புதுடில்லி, ஜூன் 21—

அஸ்ஸாமில் பொதுத் துறையில் ஒரு எண்ணை சுத்திகரிப்பு ஆலையை ஏற்படுத்துவது பற்றி ருமேனிய சர்க்காருடன் பேச்சுவார்த்தை நடத்துவதற்காக ஒரு இந்திய தூது கோஷ்டி இன்று காலை ருமேனியத் தலைநகர் புகாரெஸ்டுக்குப் புறப்பட்டது.

### லயால்பூரில் துப்பாக்கிப் பிரயோகம்; ஐவர் பலி

லாகூர், ஜூன் 21—

மேற்கு பாகிஸ்தானில் லயால்பூர் நகரில் வேலை நிறுத்தத்திலீடுபட்டுள்ள பஞ்சாலைத் தொழிலாளர் மீது போலீஸ் துப்பாக்கிப் பிரயோகம் செய்தது; ஐவர் மாண்டனர்; பலருக்குக் காயம்.

# அணு சோதனை: உடனே நிறுத்துக

## அவை உலகில் விஷத்தைப் பரப்பி வருகின்றன

## ரஷ்யா நிறுத்தியதற்குப் பாராட்டு

## அமெரிக்கப் போக்குக்கு பலத்த கண்டனம்

### சென்னை சமாதான மாநாட்டில் ராஜாஜி

சென்னை, ஜூன் 22—

"அணுஆயுத சோதனைகளினால் ஒவ்வொரு வினாடியும் உலகத்தில் விஷம் பரவி வருகிறது. இந்தத் தலைமுறையிலுள்ள மக்கள் மட்டுமின்றி எதிர்கால சந்ததிகளும் இதனால் மிகவும் பாதிக்கப்படப் போகிறார்கள். ஆகவே, அணு ஆயுத சோதனைகள் உடனடியாக நிறுத்தப்படவேண்டும். சோவியத் யூனியன் தான் மட்டுமே முதல்முதலாக முன்வந்து இந்த சோதனைகளை நிறுத்தியதை நாம் மனமாரப் பாராட்ட வேண்டும்; அணு ஆயுத சோதனைகளை நிறுத்துவதை பொதுவான ஆயுதக் குறைப்புப் பிரச்னையுடன் இணைத்து தாமதப்படுத்தக் கூடாது".

இவ்வாறு நேற்று சென்னை கோகலே மன்றத்தில் திரு. கே. பாஷ்யம் அவர்களின் தலைமையில் ஸ்டாக்ஹோம் ஆயதக் குறைப்பு - சர்வதேச ஒத்துழைப்பு மகாநாட்டை ஆதரிப்பதற்காக நடைபெற்ற சென்னை ராஜ்ய மகாநாட்டில் பேசுகையில் ராஜாஜி அவர்கள் குறிப்பிட்டார்.



கேரள முதன் மந்திரி திரு. இ. எம். எஸ். நம்பூதிரிப்பாட் மகாநாட்டைத் துவக்கிவைத்தார்.

திரு. சி. ஆர். கிருஷ்ணப்பிள்ளை மகாநாட்டுக்குவந்திருந்தபிரதிநிதிகளையும், ஏனையோரையும், ராஜாஜி, நம்பூதிரிப்பாட் முதலிய தலைவர்களையும் வரவேற்றுப் பேசினார்.

(3-ம் பக்கம் பார்க்க)

## சீலத்தில் சிறந்தவர்

### இ. எம். எஸ். ஸிற்கு ராஜாஜி பாராட்டு

சென்னை, ஜூன் 21—

சென்னைக்கு விஜயம் செய்துள்ள கேரள முதலமைச்சர் இ. எம். எஸ். நம்பூதிரிப்பாட்டை வரவேற்பதில் பெரு மகிழ்ச்சி கொள்கிறேன் என்று இங்கு கோகலே மண்டபத்தில் நடைபெற்ற கூட்டத்தில் ராஜாஜி கூறினார்.

பல ஆண்டுகளுக்கு முன் இ. எம். எஸ். உடன் சிறையில் இருந்தேன். அப்பொழுதே அவரது சிறந்த சீலமும் நற்பண்புகளும் என்னைக்கவர்ந்தன. எந்தஅரசியல் கட்சியைச் சேர்ந்தவர்களாகஇருந்தாலும் சரி, சிறந்த சீலமுள்ளவர்கள் நமக்கு வேண்டும், என்றார் ராஜாஜி.

இ எம். எஸ். உடன் ஒரே மேடையில் அமர்ந்திருக்கும் நல்வாய்ப்புப் பற்றி மகிழ்ச்சியுறுவதாயும் சென்னை மக்கள் எவ்வித அரசியல் கட்சி பாகுபாடுமின்றி அவருக்கு வரவேற்பளிக்க வேண்டும் என்றும் ராஜாஜி கூறினார்.

இ.எம்.எஸ். சிடம் பல சாதனைகளைத் தாம் எதிர்பார்த்ததாயும் ஏற்கெனவே பல சாதனைகளை அவர் நடைமுறையில் கொண்டு வந்துவிட்டார் என்றும் ராஜாஜி பாராட்டினார்.

## சகலரும் சேரும் இயக்கம்

### ஆயுத பரிஹரண மாநாட்டில் இம். எம். எஸ். துவக்க உரை

சென்னை, ஜூன் 22—

"இந்த மகாநாடு உலகம் பூராவும் பரவி நிற்கும் இயக்கத்தின் ஒரு பகுதியே. முதல் அணுகுண்டு வெடிக்கப்பட்ட நாள் முதல் இந்த இயக்கம் தோன்றி வளர்ந்து வந்துள்ளது. இந்த இயக்கத்தின் ஏதாவது ஒரு அம்சத்தை ஒத்துக்கொள்பவர்கள் உட்பட அனைவருக்கும் இதில் இடமுண்டு."

இவ்வாறு நேற்று கோகலே மன்றத்தில் நடைபெற்ற ஆயுதப் பரிகரண மகாநாட்டை துவக்கிவைத்துப் பேசுகையில் கேரள முதலமைச்சர் இ.எம்.எஸ். நம்பூதிரிப்பாட் கூறினார்.



அவர் மேலும் பேசுகையில்,

"இந்த மகாநாட்டின் விவாதங்கள் ஸ்டாக்-ஹோம் மகாநாட்டிற்கு இங்கிருந்து செல்லும் பிரதிநிதிகள் சிறந்த பங்காற்றுவதற்கு உதவுமென்று நம்புகிறேன். அணு ஆயுத சோதனைகளை உடனடியாக நிறுத்த வேண்டிய அவசியமுள்ளது. இந்தப் பிரச்சினையை மட்டும் ஒத்துக்கொள்பவர்களுக்குக் கூட இந்த இயக்கத்தில் இடமுண்டு. இன்று அணு ஆயுத சோதனைகளைநிறுத்தும்பிரச்சினை, ஆயுதக் குறைப்பு, சமாதான காரியங்களுக்கு அணு சக்தியைப் பிரயோகப்படுத்துவது போன்ற பலவற்றுடனும் தொடர்பு கொண்டுள்ளது.

ஆகவே பலதரப்பட்ட கருத்துக்கள் உடையவர்களும் கலந்து கொள்வதை ஸ்டாக்ஹோம் மகாநாடு சாத்தியமாக்கியுள்ளது. இந்த மகாநாட்டின் விவாதங்களில் நீங்கள் பூர்ணமாகப் பங்கெடுத்து உபயோககரமான முடிவுகள் எடுப்பீர்கள் என்று நம்புகிறேன்" என்றார்.

### கே. பாஷ்யம் தலைமை உரை

திரு. கே. பாஷ்யம் தன்னுடைய தலைமை உரையில், ஒரு அணு ஆயுத யுத்தத்தினால் உலகம் பூராவும் அழியும் ஆபத்து மனிதகுலத்தின் தலைமீது தொங்கிக் கொண்டிருக்கிறது. உலக வல்லரசுத் தலைவர்கள் ஒன்று கூடிப் பேசி உலக கெடுபிடி நிலைமையைத் தளர்த்துவார்கள் என்று உலக மக்கள் நம்பிக் கொண்டிருந்தனர். ஆனால் இன்று அதற்குள்ள வாய்ப்புகள் குறைந்துவிட்டன, என்றார். மேற்கு வல்லரசுகள் தாங்கள் கொடுத்த வாக்குறுதிகளிலிருந்து நழுவுவதற்கு இப்பொழுது ஹங்கேரியில் நாகி தூக்கிலிடப்பட்டதை உபயோகித்துக் கொள்ளப் பார்க்கின்றனர். ஆயினும் நாம் மனத்தளர்ச்சி அடையக்கூடாது. அணுகுண்டு யுத்த அபாயத்திற்கெதிராக மக்கள் சக்தி முழுவதையும் நாம் திரட்டவேண்டும்.

அணு ஆயுத சோதனைகளின் மூலம் இதர நாடுகளின் ஆகாய வெளியை விஷமாக்குவதற்கு எந்த நாட்டுக்கும் உரிமை கிடையாது என்று பாஷ்யம் கூறினார்.

உலக சமாதானம் வேண்டும் என்று கிளர்ச்சி செய்யும் மக்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது. ஸ்டாக்ஹோமில் நடைபெறும் உலக மகாநாட்டுக்கு இம்மக்கள் அனைவரின் ஆதரவு கிடைக்குமென்று நம்புகிறேன், என்றார்.

## பரம்பிக்குளம் தண்ணீர்

## பேச்சுவார்த்தை மீண்டும் நடக்கும்

### இ. எம். எஸ். நம்பூதிரிப்பாட் விளக்கம்

சென்னை, ஜூன் 21—

பரம்பிக்குளம் தண்ணீரைப் பயன்படுத்துவது சம்பந்தமாக கேரள—சென்னை ராஜ்யங்களிடையே உடன்பாடு ஏற்பட வேண்டியது அவசியம் என்று இங்கு நிருபர்களிடம் பேசுகையில் கேரள முதலமைச்சர் இ எம். எஸ். நம்பூதிரிப்பாட் கூறினார்.

இந்த விஷயத்தில் அநாவசியமான தாமதம் ஏற்படுவது இரு ராஜ்யங்களுக்கும் பாதகமாகும் என்றார்.

சென்னை சர்க்காருக்கும் கேரள சர்க்காருக்கும் இடையே இது பற்றி பேச்சு வார்த்தைகள் நடைபெற்றன. இதில் கேரள சர்க்கார் சார்பில் இ. எம். எஸ். நம்பூதிரிப்பாடும், சட்ட மந்திரி வி.ஆர். கிருஷ்ணய்யரும் கலந்து கொண்டார்கள்.

கேரளத்தின் சொந்தத் தேவைகளை நிர்ணயித்த பிறகு எவ்வளவு தண்ணீர் மிதப்படும், சென்னைக்கு எவ்வளவு தண்ணீர் கொடுக்க முடியும் என்ற கண்ணோட்டத்துடன் தான் கேரள சர்க்கார் ஆரம்பமுதல் இந்தப்பிரச்சினையைஅணுகியிருக்கிறது என்று அவர் கூறினார். இதுபற்றிப் பரிசீலனை செய்த நிபுணர்கள் பலவாறாகக் கருத்துத் தெரிவித்துள்ளனர். இவ்வாறு நிர்ணயிப்பில் கருத்துவேற்றுமைகள் சில இருப்பதால் கேரள சர்க்கார் எல்லா அரசியல் கட்சிகளையும் கலந்தாலோசிப்பது நல்லது என்று எண்ணியது என்றார்.

இப்பிரச்சினை பற்றி அரசியல் கட்சிகள் கூடி ஆலோசித்து முடிவெடுப்பது விரைவில் நடைபெறும். கேரள–சென்னை ராஜ்ய சர்க்கார்களுக்கிடையே ஏற்படும் உடன்பாட்டின் அடிப்படையில் கேரள கட்சிகளிடை ஓர் உடன்பாட்டை கொண்டுவரவே முயல்கிறோம் என்றார்.

### பேச்சு ஒத்திவைப்பு

கேரள சர்க்கார் ராஜ்யத்திலுள்ள அரசியல் கட்சிகளுடன் இப் பிரச்சினை மீது விவாதம் நடத்தி முடிந்த பிறகு ராஜ்யமட்டத்தில் பேச்சுவார்த்தைகள் தொடர்ந்து நடைபெறும் எனத் தெரிகிறது.

இங்கு நடைபெற்ற கூட்டத்தில் இப் பிரச்சினை பற்றி இரு ராஜ்ய. சர்க்கார்களின் கருத்துக்களும் எடுத்துக் கூறப்பட்டன. மிகவும் சுமூகமான சூழ்நிலையில் பேச்சு வார்த்தைகள் நடைபெற்றன, என்று மந்திரி பக்தவத்சலம் கூறினார். சென்னை சர்க்கார் சார்பில் காமராஜ், சி. சுப்ரமண்யம், எம். பக்தவத்சலம், கக்கன் முதலிய அமைச்சர்கள் கலந்து கொண்டார்கள்.

## சென்னை துப்பாக்கிப் பிரயோகத்திற்கு கண்டனம்

பிராஹா, ஜூன் 20—

சென்னைத் துப்பாக்கிப் பிரயோகத்தைக் கண்டனம் செய்து உலக தொழிற்சங்க சம்மேளனத்தின் பகுதியாகிய சர்வதேசப் போக்குவரத்துத் தொழிற்சங்க சம்மேளனம், சென்னை ஹார்பர் தொழிலாளர் சங்கத்திற்குப் பின்வரும் தந்தியை அனுப்பியுள்ளது:

"நியாயமான கோரிக்கைகளுக்காக வேலை நிறுத்தத்திலீடுபட்ட சென்னை துறைமுகத் தொழிலாளர் மீது போலீஸ் துப்பாக்கிப் பிரயோகம் செய்ததையும், அதன் விளைவாக 6 பேர் கொல்லப்பட்டு 120 பேர் காயமடைந்ததையும் கேட்டு மிகுந்த கொதிப்படைந்தோம். வெறுக்கத்தக்க, இந்தத் தொழிலாளர்-விரோத நடவடிக்கைக்குப் பலியானோரின் குடும்பங்களுக்கு ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். சர்வதேச சம்மேளனம் இந்திய சர்க்காரிடம் கண்டனம் தெரிவிக்கிறது. தன்னுடைய 90 லட்சம் அங்கத்தினர்கள் சார்பில் சகல இந்திய துறைமுகத் தொழிலாளர்களுக்கும் ஆதரவை உறுதி கூறுகிறோம் உங்களுடைய வெற்றிக்கு மனப்பூர்வமாக வாழ்த்துகிறோம். இந்திய துறைமுகத் தொழிலாளரின் வீரம் செறிந்த போராட்டம் நீடுழி வாழ்க. சர்வதேசத் தொழிலாளி வர்க்க ஒற்றுமை ஓங்குக."

ஆர். அவிலா
பொதுக்காரியதரிசி

## ஹங்கேரி விவகாரத்தைச் சொல்லி உச்சகட்ட மாநாட்டை தவிர்ப்பதா?

### சமாதான மாநாட்டில் ம. பொ. சி.

சென்னை, ஜூன் 22—

சென்னையில் நடக்கும் ஆயுதப் பரிஹரணத் தயாரிப்பு மாநாடு இன்று காலை 9 மணிக்கு கோகலே ஹாலில் தொடர்ந்து நடந்தது. பிரபல வழக்கறிஞர் கே. எஸ். ராமசாமி சாஸ்திரி அவர்கள் தலைமை வகித்தார்.

இந்திய சமாதானக் கவுன்சிலின் செயலாளர் தோழர் வி. பரமேஸ்வரன் ஸ்டாக்ஹோமில் நடக்கப்போகும் மாநாட்டின் நோக்கத்தை விரிவாக விளக்கிப் பேசினார். இன்றைய யுத்தக் கெடுபிடிப் போக்கைத் தவிர்க்க அணுகுண்டுத் தடையும் ஆயுதப் பரிஹரணமும் எவ்வளவு அவசியம் என்பதையும் அல்ஜீரியாவின் சுதந்திரத்தை அங்கீகரித்து அந்த பிரதேசத்தில் சமாதானம் நிலைபெறச் செய்வதின் அவசியத்தையும் வற்புறுத்தினார்.

அடுத்து பிரபல வழக்கறிஞர் கே. பாஷ்யம், ஸ்டாக்ஹோம் மகாநாட்டின் நோக்கங்களை ஆதரிக்கும் தீர்மானத்தை விளக்கிப் பேசினார். அதன் நோக்கங்கள் வெற்றிபெற சகலரும் பாடுபட வேண்டும் என்றார்.

ஹங்கேரியில் நாகி தூக்கிலிடப்பட்டதற்கும் அணுகுண்டுத் தடைக்கும் எவ்வித சம்பந்தமுமில்லை என்றும், முன்பு ஒப்புக்கொண்டதுபோல் வல்லரசுத்

(3-ம் பக்கம் பார்க்க)

# மக்கள் மன்றம்

## பி. சோ. கட்சி மகாநாடா? கம்யூனிஸ்ட்-எதிர்ப்பு மகாநாடா?

பி. சோ. கட்சியின் நிலையற்ற சந்தர்ப்பவாதக் கொள்கையாலும் ராஜ்யத்திற்கு ராஜ்யம் மாறுபட்ட நடைமுறையாலும் பேச்சாலும் கலகலத்துப் போய், செயலற்று ஸ்தம்பித்துக் கிடந்த மேட்டூர் அணை பி. சோ. கட்சியின் அணியை எதிர்காலம் தெரியாது திக்குமுக்காடிய தங்களின் ஊழியர்களை ஸ்திரப்படுத்த ஏதாவது ஸ்டண்ட் அடிக்க வேண்டுமென்ற திட்டத்தில், சுமார் ஒரு வருட காலமாக ஜில்லா மகாநாட்டை இங்கு கூட்டுவது என்று முடிவு எடுத்து முயற்சி செய்துகொண்டு வந்தனர், பலமுறை தேதிகளை ஒத்திப்போட்டனர். பிறகு தேவிகுளம் தேர்தல் முடிவு ஒட்டிக் கொண்டிருந்த உயிரையும்போக்க வழி செய்ததால், உடனடி முதல் சிகிச்சை என்ற அடிப்படையில் மகாநாட்டை சென்ற 15, 16-ல் மேட்டூரில் நடத்தினர். கேரளத்தின்பால் மேட்டூர் மக்களுக்கு ஆதரவு ஏற்படுவதைக் கண்டு கேரளாவில் இருந்து மூன்று தலைவர்கள் வருவதாக விளம்பரப் படுத்தினர். ஆனால் யாரும் கேரளாவில் இருந்துவரவில்லை.

கோரே எம். பி, பி. எஸ். சின்னதுரை மற்றும் சில குட்டி பிரசங்கிகள் வந்திருந்தனர்.

மகாநாடு விளம்பரம் நன்றாக இருந்ததே ஒழிய, ஜீவன் அற்று நடந்தது. மகாநாட்டிலே இன்றைய தொழிலாளி, விவசாயி, மற்ற பொதுமக்கள் நிலை, தேசத்தின் நிலை, யுத்த அபாயம், சமாதானம் ஆகியவற்றைப் பற்றி பூர்ணமாக விவாதித்து வழிகாட்டுவதற்கு மாறாக "கேரளாவில் கம்யூனிஸ்டுகள் ஆட்சி நடத்துகின்றனர். தேசம் பூராவும் கம்யூனிஸ்ட் செல்வாக்குப் பெறுகின்றனர். மேட்டூரிலேயே வளருகிறது தேவிகுளத்திலே வெற்றி—இவைகளை எப்படி தடுத்து நிறுத்துவது" என்ன பொய்களைச் சொல்வது, கம்யூனிஸ்ட் கட்சியின் மீது எவ்வித அபாண்டத்தை சுமத்துவது என்பதைப் பற்றியே மகாநாட்டில் தீவிரமாக விவாதித்துள்ளனர். கம்யூனிஸ்ட் கேரளாவை, படம்பிடித்து காட்டத்தான் இந்த மகாநாடு என்று ஒரு பிரசங்கியே குறிப்பிட்டார் தனது பேச்சில், என்றால் பாருங்களேன்.

கம்யூனிஸ்ட் தலைவர்களையும், கட்சியைப் பற்றியும் மிகவும் மட்டரகமாகப் பேசப்பட்டது. குறிப்பாக தோழர் ஈ. எம். எஸ். அவர்களை கீழ்த்தரமாக பேசினர். ஊர்வலத்திலே "ஈ. எம். எஸ். ஒழிக! அவர் சர்க்கார் ஒழிக!" என்றும், "கம்யூனிஸ்ட் சர்க்கார் ஒழிக!" என்றும் கோஷித்தனர். கம்யூனிஸ்ட்களுக்கு மாஸ்கோவில் இருந்து பணம் வருவதாகவும், அது மேட்டூருக்கு மாதம் 350, 400 என்று பிரித்து வருவதாகவும் கூறினர். இல்லை என்றால் மேட்டூரில் இப்படி பிரமாதமாக கூட்டம் நடத்த, சைக்கிள் ஊர்வலம் நடத்த, கொடி தைக்க காசு ஏது என்று பேசினர். இந்த பேச்சுகளின்விளைவால் மக்களிடம் ஒரே வெறுப்பு ஏற்பட்டுள்ளது.

ஒரு மேட்டூர் தொழிலாளி

•

## அனுபவபூர்வமாக உணர்ந்தேன்

தோழரே,

நான் கம்யூனிஸ்ட் கட்சியின் இயக்கத்திலிருந்து பிரிந்து மன்னார்குடி திருத்துறைப்பூண்டி தாழ்த்தப்பட்டோர் பொதுநல சங்கம் என்ற பெயரில் உள்ள ஸ்தாபனத்தில் சேர்ந்து அதன் காரியதரிசியாக செயல்பட்டு வந்தேன். ஆனால் நடைமுறையில், இத்தகைய ஸ்தாபனம் ஹரிஜன மக்களின் முன்னேற்றத்திற்கு உதவியாக இருக்காது; நிலப்பிரபுத்வ சக்திகளுக்குத்தான் உதவி செய்வதில் கொண்டு போய்விடும், என்பதை அனுபவ பூர்வமாக உணர்ந்து, அதன் காரியதரிசி பொறுப்பிலிருந்தும், அந்த ஸ்தாபனத்துடன் எல்லாவித தொடர்புகளிலிருந்தும் விலகி, மீண்டும் கம்யூனிஸ்ட் கட்சி இயக்கத்தில் பங்கு கொள்ள முடிவு செய்து விட்டேன். கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமையில் தான் உண்மையிலேயே ஹரிஜன மக்களின் சமூகப் பொருளாதார விடுதலை கிடைக்கும் என்பதை உணர்ந்து, கட்சியின் இயக்கத்தில் பங்கெடுப்பதாக உறுதி அளிக்கிறேன்.

எஸ். ஆரோக்யசாமி
சிங்கமங்கலம்
(தஞ்சை ஜில்லா)

# சென்னையில் அமைதியான ஹர்த்தால்

## தினத்தந்தியின் மூளையில் கலாட்டா

சென்னை, ஜூன் 21—

துறைமுகத் தொழிலாளர் மீது நடைபெற்ற துப்பாக்கிப் பிரயோகத்தைக் கண்டிக்கும் முறையில், 100 தொழிற்சங்கங்கள் விடுத்த வேண்டுகோளுக்கிணங்க, சென்னை நகரமெங்கும் ஜூன் 18-ல் பூரண ஹர்த்தால் வெற்றிகரமாக நடைபெற்றது அல்லவா!

சென்னை நகரில் இதற்கு முன் என்றும் கண்டிராத வகையில் இவ்வளவு அமைதியாக நடைபெற்றஹர்த்தாலை நாங்கள் பார்த்ததேஇல்லையென்று சென்னைவாசிகள்ஒவ்வொருவரும்பெருமையாக பேசிக் கொள்ளுகிறார்கள். இந்த உண்மையை தொழிலாளிவர்க்கத்தின் விரோதிகளும், அவர்களின் பத்திரிகைகளும் கூட ஒப்புக் கொண்டுள்ளன.

அப்படியிருக்க, தினத் தந்திப் பத்திரிகை, ஹர்த்தாலின்போது ஏதோ ஒன்றிரண்டு இடங்களில் நடைபெற்ற சிறு சச்சரவை பிரமாதப்படுத்தி, "சென்னையில் அமளி! கலாட்டா! பஸ்கள் மீது கல் வீச்சு!" என்று முதல் பக்கத்தில் கொட்டை எழுத்துக்களில் பிரசுரித்திருக்கிறது. சென்னை நகர் முழுவதும் இதே அமளிதான் போலிருக்கிறது என்று வெளியூர்க்காரர்கள் நினைத்துக் கொள்ளட்டுமென்ற முறையில் செய்தி வெளியிட்டது. இதைப் படித்த சென்னை வாசிகள், குறிப்பாக தொழிலாளிகள் மிகவும் ஆத்திரப் பட்டார்கள்.

அமைதிமிக்க, வெற்றிகரமான இந்த ஹர்த்தாலை சிறுமைப் படுத்தும் எண்ணத்துடன், தொழிலாளி வர்க்கப் போராட்டங்களுக்குப் பொதுஜன ஆதரவு திரளுவதைக்கண்ட வயிற்றெரிச்சல் காரணமாகவே, இப்படிப் பட்ட தலைப்பு கொடுத்து தினத்தந்தி வெளியிட்டுள்ளது. இது போன்றே அகில இந்திய தபால்—தந்தி ஊழியர் போராட்டத்தின் போதும், அப்போராட்டத்தைச் சிறுமைப்படுத்தவும், உடைக்கவும் தினத்தந்தி எவ்வளவு பிரச்சாரம் செய்தது என்பதை அனைவரும் அறிவார்கள். தினத்தந்திகளும் இதுபோல் இன்னும் எத்தனையோ தொந்திகளும் எதிர்த்தும்கூட தபால் தொழிலாளர் போராட்டம் வெற்றியடைவதைத் தடுக்கமுடிந்ததா! பொதுஜன ஆதரவுடன் தபால் தொழிலாளர்களுக்கு வெற்றி கிடைத்தது. இடைக்கால நிவாரணமும் கிடைத்தது. சம்பள உயர்வுப் பிரச்னைகளிலும் தீர்ப்பு கிடைக்கப்போகிறது!

## அறிவிப்பு

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் தஞ்சை ஜில்லாக் கமிட்டிக் கூட்டம் ஜூன் 24, 25 தேதிகளில் தஞ்சையில் நடக்கவிருந்தது, ஜூன் 26, 27 தேதிகளுக்கு ஒத்தி வைக்கப்பட்டுள்ளது. தாலூகா கமிட்டிகளும், கிளைகளும் விவசாய அரங்க தஸ்தாவேஜு பற்றிய தங்கள் அபிப்பிராயத்தை 26-6-58க்குள் ஜில்லா காரியாலயத்திற்கு அனுப்ப வேண்டுகிறோம்.

வீ. ராமசாமி
செயற்குழுவிற்காக,
தஞ்சை.

# துப்பாக்கி பிரயோகத்திற்கு எங்கும் கண்டனம்

## பல இடங்களில் ஹர்த்தால்

சென்னை, ஜூன் 20 —

ஜூன் 16-ந் தேதியன்று சென்னை துறைமுகத்தில் ஆறு உயிர்களைப் பலி வாங்கிய மிருகத்தனமான போலீஸ் துப்பாக்கிப் பிரயோகத்திற்கு நாடெங்கும் பலத்த கண்டனம் எழுந்துள்ளது. பல இடங்களில் ஹர்த்தால்கள் நடைபெற்றுள்ளன. கூட்டங்களில் கண்டனத் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. உயிரிழந்தோர் குடும்பங்களுக்கு நஷ்டஈடு கோரப்பட்டது.

### கோவையில் ஹர்த்தால்

சென்னை துறைமுகத் தொழிலாளர் மீது நடத்தப்பட்ட துப்பாக்கிப் பிரயோகச் செய்தி கேட்டு கோவைத் தொழிலாளிகள் மிகுந்த ஆத்திரமடைந்தனர். கோவை டவுனில் ஸ்டேன்ஸ் மில், சோமசுந்தரா மில் தொழிலாளிகள் 16—6—58 பிற்பகலில் ஹர்த்தால் அனுஷ்டித்தனர்.

ஸ்டேன்ஸ் மில்லுக்கு முன்னால் இருந்து மிகப் பெரிய ஊர்வலம் புறப்பட்டு முக்கிய வீதிகள் வழியாக, "காங்கிரஸ் சர்க்காரின் போலீஸ் அடக்குமுறை ஒழிக; துறைமுகத் தொழிலாளர்களைச் சுட்டுக் கொன்றதைப் பற்றி பகிரங்க விசாரணை செய்க", என்ற கோஷங்களை முழக்கிக் கொண்டு சென்றனர்.

கம்யூனிஸ்ட் கட்சி நகரக் கிளைக் காரியாலயத்தின்முன் நடைபெற்ற கூட்டத்தில், சென்னையில் நடைபெற்ற துப்பாக்கிப் பிரயோகத்தைத் தொழிலாளிகள் ஒன்று சேர்ந்து கண்டிக்க வேண்டுமென்று தோழர் எஸ். கருப்புசாமி கேட்டுக் கொண்டார்.

உயிர் நீத்த தியாகிகளுக்கு வணக்கம் தெரிவித்தும், அவர்கள் குடும்பங்களுக்கு அனுதாபம் தெரிவித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

டெக்ஸ்டூல் கம்பெனியில் வேலை பார்க்கும் தொழிலாளிகள் 16-6-58-ல் மாலை 7 மணி முதல் ஹர்த்தால் செய்தனர்.

17-6-58-ல் பகல் ஷிப்டு தொழிலாளிகள் பரிபூர்ணமாக ஹர்த்தால் செய்து கண்டனம் தெரிவித்தனர்.

தண்டாயுதபாணி பவுண்டரி தொழிலாளிகளும் ஹர்த்தால் செய்தனர். பி.எஸ்.ஜி கம்பெனியில் 'நோ ஒர்க்' என்று கம்பெனி மூடப்பட்டதால் அதன் தொழிலாளிகள் ஊர்வலம் நடத்தி கண்டனம் தெரிவித்தனர். ராமகிருஷ்ணா இண்டஸ்ட்ரியல்ஸ் தொழிலாளிகளும் ஹர்த்தாலில் கலந்து கொண்டனர்.

### திருச்சியில் மாபெரும் கண்டனக் கூட்டம்

17-6-58-ல் கூடிய திருச்சி நகரத் தொழிற்சங்கப் பிரதிநிதிகள், சென்னை துப்பாக்கிப் பிரயோகத்தைக் கண்டிக்க 18-ந் தேதி கண்டன ஊர்வலம் பொதுக்கூட்டம் நடத்தத் தீர்மானம் செய்தனர்.

18-ந் தேதி மாலை 6-30 மணிக்கு 3000க்கு மேற்பட்ட நகரத் தொழிலாளர்கள் மெயின் கார்ட் கேட்டிலிருந்து, கண்டன கோஷங்கள் முழக்கிக் கொண்டு மாபெரும் அணிவகுப்பு ஊர்வலம் நடத்தினர்.

திருச்சி நகர வன்னிமரத்தடியில் தோழர் கே. பி. எஸ். கோன் தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில் கே. அனந்தநம்பியார், ஆர். உமாநாத், வி. நாகு ஆகியோர் பேசினர். உயிரிழந்த தோழர்களுக்கு அஞ்சலி தெரிவித்தும், துப்பாக்கிப் பிரயோகத்தைக் கண்டித்தும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

தோழர் சக்கரை செட்டியார் மறைவுக்கும் வருந்தி ஒரு அனுதாபத் தீர்மானம் நிறைவேற்றப் பட்டது.

### பொன்மலை

சென்னை ஹார்பர் தொழிலாளர் மீது போலீஸ் சுட்ட தகவல் கிடைத்ததும் ரயில்வே லேபர் யூனியன் (ஆர். எல். யூ) கொடி பாதிக் கம்பத்தில் இறக்கிப் பறக்கவிடப்பட்டது.

17-6-58 மாலையில் நடைபெற்ற கூட்டத்தில், கிளைச் சங்கத் தலைவர் தோழர் எம். பிச்சைமுத்து அவர்கள் தலைமைவகிக்க, தோழர் அனந்த நம்பியார், சென்னை போலீசின் மிருகத்தனமான தாக்குதலை வன்மையாகக் கண்டித்துப் பேசினார்.

துப்பாக்கிப் பிரயோகத்தைக் கண்டித்தும், இறந்தவர்களுக்கு வணக்கம் தெரிவித்தும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

சக்கரை செட்டியாரின் மறைவு பற்றியும் கூட்டத்தில் பேசப்பட்டு அனுதாபத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

துப்பாக்கிப் பிரயோகத்தைக் கண்டித்து மத்திய மந்திரி எஸ். கே. பட்டீலுக்கும், சென்னை முதன் மந்திரி காமராஜ நாடாருக்கும் தந்திகள் அனுப்பப்பட்டன.

### சேலம்

சென்னை துப்பாக்கிப் பிரயோகத்தைக் கண்டித்து இயக்கம் நடத்துவது பற்றி யோசிக்க 18-6-58 அன்று தொழிற்சங்கப் பிரதிநிதிகள் கூட்டம் எஸ். எம். ராமையா தலைமையில் நடைபெற்றது. மில், மேக்னிசைட், ரயில்வே, நகரசுத்தி, தோல்சாயம், ரைஸ்மில், மின்சாரம், பீடி முதலிய தொழிற்சங்கப் பிரதிநிதிகள் கலந்துகொண்டனர். கே. செல்லப்பன், கல்யாணசுந்தரம், கே. மாரிமுத்து, கே. செல்வராஜ், மற்றும் பலர் பேசினர்.

21-6-58ல் கண்டனப் பொதுக் கூட்டமும், 22-6-58ல் போலீஸ் அமைச்சர் வரும்போது எதிர்ப்பு ஆர்ப்பாட்டமும் நடத்துவதென்று முடிவு செய்யப்பட்டது.

தோழர் சக்கரை செட்டியாரின் மறைவு குறித்தும் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

### திண்டுக்கல்

பாரதி திடலில் தோழர் என். வரதராஜன் தலைமையில் கண்டனக் கூட்டம் நடைபெற்றது. ஆரம்பத்தில் ஒரு தீப்பந்த ஊர்வலம் அடக்குமுறை கண்டன கோஷங்களை முழக்கிக்கொண்டு நகர்வலம் வந்தது. தோழர்கள் என். வரதராஜன், எஸ். ஏ. தங்கராஜன் பேசியபின், துப்பாக்கிப் பிரயோகத்தைக் கண்டித்தும் உத்தியோகப் பற்றில்லாதவர்களைக் கொண்ட பகிரங்க விசாரணை கோரியும், உயிர்நீத்தவர்களுக்கு அஞ்சலி தெரிவித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

### திருப்பூர்

சென்னை துப்பாக்கிப் பிரயோக செய்தி கேட்டதும் திருப்பூர் தொழிலாளி வர்க்கம் தாங்கொணாத் துயரத்துடன் கொதித்தெழுந்தது. தோழர்கள் ஏ. கணபதி, சி. பொன்னுசாமி தலைமையில் பெரிய ஊர்வலம் ஒன்று நடைபெற்றது. பிறகு நொய்யல் நதி மணற் பரப்பில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில், துப்பாக்கிப் பிரயோகத்தைக் கண்டனம் செய்தும், இறந்தவர்களின் குடும்பங்களுக்கு நஷ்டஈடு தரக்கோரியும், துறைமுகத் தொழிலாளர்களின் கோரிக்கைகளை வழங்கக் கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டு மத்திய சர்க்காருக்கு அனுப்பப்பட்டன.

தோழர் சக்கரை செட்டியார் மறைவுக்கும் அனுதாபத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

### வண்டலூர், தாம்பரம் குரோம்பேட்டையில் ஹர்த்தால்

சென்னை துறைமுகத்தில் நடைபெற்ற துப்பாக்கிப் பிரயோகம் பற்றிய தகவல் கேட்டதும் வண்டலூர் ஸ்டாண்டர்டு மோட்டார் கம்பெனித் தொழிலாளிகள் பலமாக வற்புறுத்தியதற்கிணங்க, கம்பெனி நிர்வாகம் 18—6—58ல் கம்பெனியை மூடிற்று. தொழிலாளிகள் ஊர்வலமாகத் திரண்டு அடக்குமுறை எதிர்ப்பு கோஷங்களை முழக்கிக் கொண்டு தாம்பரம் கடைத் தெருவில் ஊர்வலமாக வந்தனர்.

தாம்பரம் சென்ட்ரல் சையன்டிபிக் தொழிலாளிகளும், குரோம்பேட்டை எம் ஐ டி. தொழிலாளிகளும், சர்க்கார் 'கோச்' பாக்டரி தொழிலாளிகளும் இந்த ஊர்வலத்தில் கலந்து கொண்டனர்.

இந்திரா காட்டன் மில் தொழிலாளர்களும் ஊர்வலத்தில் கலந்து கொள்ள ஆர்வம் காட்டினர். ஆனால் நிர்வாகம் அவர்களை வெளியில் விடாமல் அடைத்து வைத்து விட்டது.

சுமார் 1500 பேர் கொண்ட மேற்படி ஊர்வலம் குரோம்பேட்டை ரயில்வே நிலயத்திற்கு எதிரில் பொதுக்கூட்டத்தில் போய் முடிந்தது. தோழர் சைமன்பால் தலைமை வகித்தார். ஆதிசேஷலு, சாமுவேல், வீரராகவலு ஆகியோர் துப்பாக்கிப் பிரயோகத்தைக் கண்டித்துப் பேசினர்.

## ஆமணக்கு நத்தம் வட்டார விவசாயப் பிரதிநிதிகள் கூட்டம்

அருப்புக்கோட்டை, ஜூன் 12—

ஆமணக்கு நத்தம் வட்டார விவசாயிகள் சங்கப் பிரதிநிதிகள் கூட்டம் 6-6-58-ல் ஆமணக்கு நத்தம் கிராமத்தில் எஸ். சொக்கப்பன் தலைமையில் நடைபெற்றது.

1. மின்சார வசதி செய்தல், 2. ஆமணக்கு நத்தம் குருசாமி கோவில் ரோடு போடுதல், 3. விவசாய உற்பத்தி பொருள்களுக்கு நியாய விலை கிடைக்கும்படி செய்தல், 4. விவசாயிகள் அனுபவத்திலிருந்து வந்த படப்படி, குப்பை போட்டுள்ள இடங்களை சர்க்கார் ஆக்ரமிப்பதைக் கண்டித்தும் நடவடிக்கை எடுத்துக்கொள்வதென்றும், 5. அங்கத்தினர்கள் சேர்ப்பதைத் துரிதப்படுத்துவதென்றும், 6. ஜூலை மாதத்தில் சங்கத் திறப்பு விழாவை முக்கிய தலைவர்களை அழைத்து சிறப்பாக நடத்துவதென்று முடிவு செய்யப்பட்டு கமிட்டியும், பட்ஜெட்டும் போடப்பட்டுள்ளது. (ந-வி)

# தொழில் தகராறுகளில் போலீஸ் தலையீடு கூடாது

## உற்சாகத்துடன் வேலைசெய்ய உரிமைகளை அளிக்கவேண்டும்

### வர்த்தக சிப்பந்திகள் சம்மேளன விழாவில் கேரள சட்ட மந்திரி வி. ஆர். கிருஷ்ணய்யர்

சென்னை, ஜூன் 20—

தொழிலாளர்கள் மகிழ்ச்சியுடனும் உற்சாகத்துடனும் தத்தம் வேலைகளைத் திறம்படச் செய்தல் வேண்டும். தேசத்தின் நிர்மாணத்திற்காகப் பணிபுரிகிறோம் என்ற உணர்ச்சியுடன் வேலை செய்ய வேண்டும். இதற்கு உறுதுணை செய்யும் வகையில் தொழிலதிபர்கள் முதலாளிகள் உழைப்போருக்கு உரிய வசதிகளை அளிக்க வேண்டும் என்று இங்கு நடைபெற்ற வர்த்தக சிப்பந்திகள் சம்மேளன ஆரம்ப விழாவில் பேசிய கேரள ராஜ்ய சட்ட மந்திரி வி. ஆர். கிருஷ்ணய்யர் கூறினார்.

### சர்க்கார் முன்மாதிரியாக விளங்க வேண்டும்

சர்க்கார் ஊழியர் விஷயத்தில் முன்மாதிரியாக விளங்கி ஊழியர் நலன்களை அளிக்க முன்வரவேண்டும் என்றார். கேரள சர்க்காரைப் பொறுத்தவரை கடைசிப்படியிலுள்ள சேவகனுக்கு ரூ 60-ம் மிக உயர்ந்தசம்பளம்ரூ 1000-ம்என்று வரையறுத்துள்ளதைச் சுட்டிக் காட்டினார்.

தொழில் தகராறுகளை எப்பொழுதும் சுமுகமாகவே தீர்க்கவேண்டும் என்றும் போலீஸ் தலையீடு கூடாதுஎன்றும் அவர் குறிப்பிட்டார். ஆத்திரமூட்டும்சம்பவங்கள் எத்தனையோநடந்தும் கேரளராஜ்யத்தில் இதுவரையில் ஒருதடவை கூட துப்பாக்கிப் பிரயோகம் நடக்கவில்லை என்றார்.

கூட்டத்திற்கு வி. ஜி. ராவ் தலைமைவகித்தார். கே. எஸ். ஜானகிராமன் வரவேற்புரை நிகழ்த்தினார். தொழிற் சங்க தந்தை சக்கரைக்கு அஞ்சலி செலுத்தியும், வர்த்தக ஊழியர் கோரிக்கைகளை விளக்கியும் பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## ஹங்கேரி. . .

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

தலைவர்கள் கூடிப்பேசவேண்டும் என்றார்.

அடுத்து தமிழரசுக்கழகத் தலைவர் திரு. ம. பொ. சி. பேசுகையில், அணுகுண்டை குற்றமற்ற நிரபராதிகளான ஜப்பானிய மக்களின் மேல்போட்ட அமெரிக்கா, சீன மக்களால் விரட்டப்பட்ட சியாங்கைத் தூக்கிப்பிடித்துக் கொண்டிருக்கும் அமெரிக்கா ஹங்கேரியநாகிவிவகாரத்தைப்பற்றிப் பேச அருகதை இல்லை என்றார். அதைக் காரணமாகச் சொல்லி அணுகுண்டு யுத்தம் செய்யத் தயாராவது என்ன நீதி என்று கேட்டார்.

ஹிட்லர்பிறக்காமல்ஒரு வள்ளுவன் பிறந்த தமிழகம், முசோலினி பிறக்காமல், இளங்கோவடிகள் பிறந்த தமிழகம் சமாதானம் உள்ளங் கொண்டது என்று கூறினார்.

''ஏதிலார் குற்றம்போல்
தன்குற்றம் காண்கிற்பின்
தீது உண்டோ
மன்னும் உயிர்க்கு''

என்ற வள்ளுவன் காட்டிய வழியில் உலக அரசுகள் நடந்தால் இன்று சாந்தி நிலவும். இந்த வழியில் நடக்கச் செய்ய ஜனசக்தியைத் திரட்டவே இத்தகைய மாநாடுகள் என்றார் ம. பொ. சி.

அடுத்து திரு. ராமசாமி சாஸ்திரி மகாநாட்டின் நோக்கங்களை ஆதரித்தார்.

திரு. கே. எஸ். வெங்கட்ருமன், பார்வதி அம்மாள், விஜய பாஸ்கரன், எஸ். கிருஷ்ணமூர்த்தி ஆகியோர் தீர்மானங்களின்மீது பேசினர்.

டைரக்டர் சுப்ரமண்யம் நன்றி நவில தேசிய கீதத்துடன் மாநாடு முடிந்தது. தீர்மானங்கள் விபரம் பின்பு:

## சோவியத் விவசாயத்தில் பெரிய மாறுதல்கள்

மாஸ்கோ, ஜூன் 19—

சோவியத் விவசாயிகள் அரசாங்கத்திற்குக் கட்டாயமாக தான்யம் கொடுக்க வேண்டுமென்றிருந்த பழைய முறை ரத்து செய்யப்பட்டுவிட்டது. தான்யங்களுக்கு புதிய விலை முறையும் ஏற்படுத்தப்பட்டுள்ளது. இவை புரட்சிகரமான மாறுதல்கள் என்று கூறப்படுகிறது.

(1ம் பக்கத் தொடர்ச்சி)

ராஜாஜி, நம்பூதிரிப்பாட் ஆகியோர் மேடைக்கு வரும்போது சபையோர் பலத்த கரகோஷம் செய்து வரவேற்றனர்.

ராஜாஜி தன்னுடைய பிரசங்கத்தில், ஸ்டாக்ஹோம் நகரில் அடுத்த மாதம் நடைபெற விருக்கும் உலக மகாநாட்டைக்குறிப்பிட்டு, அம் மகாநாட்டுக்குச் செல்வதற்குத் தன்னால் இயலாமல் இருப்பதற்கு வருத்தம் தெரிவித்தார். அவர் மேலும் பேசுகையில் குறிப்பிட்டதாவது:

''இன்று உலகத்தில் கெடுபிடி யுத்த நிலைமை இருந்து வருகிறது. நாம் உண்மையான யுத்தத்திற்கு அருகாமையில் இருப்பதுபோன்ற நிலைமையையே இதுவும் ஏற்படுத்தியுள்ளது.

'ஹிட்லரை எதிர்த்து நடைபெற்ற யுத்தம் எதிர்காலத்தில் எல்லா யுத்தங்களையும் அறவே ஒழிப்பதற்காக நடக்கும் யுத்தம் என்று கூறப்பட்டது. ஆனால் அந்த யுத்தத்தின் முடிவு ஒரு புதுவிதமான யுத்தத்தை, தொடர்ந்து இருந்து கொண்டே இருக்கும் ஒரு 'யுத்தத்தை உண்டாக்கி விட்டது,'' என்றார்.

### மிகமுக்கிய விஷயம்

''இன்று நாம் அனைவரும் ஆயுதக் குறைப்பில் அக்கறை கொண்டுள்ளோம். ஆனால்மிகவும் முக்கியமான விஷயம் அணு ஆயுத சோதனைகளைத் தடை செய்வதே. இதில்தான் நாம் அதிக கவனம் செலுத்த வேண்டும். இன்று அணு ஆயுதங்களைக் கைவிடுவதற்கு மறுப்பவர்கள், ஆயுதக் குறைப்புப் பிரச்னை பூராவையுமே நாம் பரிசீலனை செய்ய வேண்டும்; அணு ஆயுதங்களைப் பற்றி மட்டும் பேசுவதால் என்ன பயன்?'' என்று கூறுகிறார்கள். இந்தவாதம், ஒரு குறிப்பிட்ட தெருவை உடனே பழுதுப்பார்க்க வேண்டுமென்று சொன்னால், 'அதனால் மட்டும் என்ன பிரயோஜனம்; நகரம் பூராவையுமே பழுதுபார்க்க வேண்டும். அது தான் நாங்கள் விரும்புவது', என்று கூறுவதைப் போலத்தான் உள்ளது.. (சபையில் சிரிப்பு).

''ஒரு தெருவைப் பழுதுபார்ப்பதை வேண்டுமானால் ஒத்திப் போடலாம். ஆனால் அணு ஆயுத யுத்தப் பிரச்னையின் பரிகாரத்தை நாம் ஒத்திப்போட முடியாது.

''அணு ஆயுத சோதனைகளினால் விஷப்புகை மேலே சென்று மேகங்களில் சேர்ந்து மழைமூலமாகக் கீழே வருகிறது. தண்ணீர், காற்று, காய்கறிகள், மீன். பால் முதலிய எல்லாவற்றிலும் அந்த விஷம் ஊடுருவுகிறது. ஆகவே இதனால் ஏற்படும் அபாயம் எத்தகையது என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? உலகம் பூராவையுமே இந்த விஷம் பாதிக்கிறது'' என்றார். இன்று சிலர் உலகம் பூராவையும் விஷமாக்கும் தொழிலை எவ்வித மனச்சாட்சியுமின்றி மேற்கொண்டுள்ளனர்.

இது மனித சமூகத்தின் சகல ஜீவாதாரமான உரிமைகளுக்கும் எதிராகச் செய்யப்படும் கொடிய குற்றமாகும்'' என்றார்.

### நாகி சம்பவம்

இன்று அமெரிக்காவும், பிரிட்டனும் அணு ஆயுத சோதனைகளைக் கைவிட மறுத்து வருகின்றன; ரஷ்யா தானாக இவைகளை நிறுத்திய பின்னும் மேலைய வல்லரசுகள் மறுத்துவருகின்றன. ''நொண்டிக் கழுதைக்குச் சறுக்கினதே சாக்கு'' என்ற பழமொழி கேற்ப, இப்பொழுது ஹங்கேரியில் நாகி என்பவரைத் தூக்கிலிட்ட சம்பவம் இவர்களுக்குத் தொக்காகக் கிடைத்துள்ளது. நாகி தூக்கிலிடப்பட்டதால் இனி உச்சகட்ட மகாநாடு நடப்பதே துர்லபம்; நாங்கள் அணு ஆயுத சோதனைகளை நிறுத்தவே மாட்டோம் என்று கூறுகின்றனர். இவர்களின் வாதத்தில் எத்தனையை நியாயமுமில்லை.

ஆயினும் பிரிட்டனிலும் சரி, அமெரிக்காவிலும் சரி மேலும் மேலும் அதிகமான மக்கள் அணு ஆயுதங்களுக்கு எதிராகத் திரண்டு வருகின்றனர்.

இந்தியாவில் நம் சர்க்காரே அணு ஆயுதங்களை ஒழிக்க வேண்டும் என்ற கொள்கையை ஆதரித்து வருகிறது. இந்த போதிலும் மக்களுக்கும் ஒரு கடமை உண்டு. இத்தகைய மகாநாடுகள் மிகவும் அவசியம், அனைவரும் ஆதரிக்க வேண்டும்.

### சமாதான இயக்கம்

சமாதான இயக்கத்தைப் பற்றி ராஜாஜி பேசுகையில், இது ஆரம்பத்தில் கம்யூனிஸ்டுகளினாலும், சோவியத் ரஷ்யாவாலும் ஆரம்பிக்கப்பட்ட போதிலும்கூட, இன்று இது அனைவருக்கும் தேவையான இயக்கமாகும். மக்கள் அனைவருடைய இயக்கமுமாகும், என்று கூறினார்.

மகாநாட்டின் நேற்றைய நிகழ்ச்சிகளின் இறுதியில், ''அவன் அமரன்'' புகழ் பீப்பிள்ஸ் பிலிம்ஸ் குழுவினர், இன்னிசை விருந்தளித்தனர்.

# பஞ்சாயத்துபோர்டுதேர்தல்களில் மேலும் கம்யூனிஸ்டுகள் வெற்றி

சென்னை, ஜூன் 19—

தமிழ் நாட்டில் பஞ்சாயத்துத் தேர்தல்களில் மேலும் பல இடங்களில் கம்யூனிஸ்ட் அபேட்சகர்கள் வெற்றியடைந்துள்ளனர். அவ்விபரத்தைக் கீழே தருகிறோம்.

### ஆலங்காடு

இங்கு 16–6–58-ல் பஞ்சாயத்துத் தேர்தல் நடைபெற்றது. தி. மு. க. முதலியோரின் பலத்த எதிர்ப்பு இருந்தபோதிலும், 10 ஸ்தானங்களில் 7 ஸ்தானங்களுக்கு நிறுத்தப்பட்டிருந்த கம்யூனிஸ்ட் அபேட்சகர்கள் அனைவரும் பெருவாரியான ஓட்டுகளால் தேர்ந்தெடுக்கப்பட்டனர். கட்சி அபேட்சகருக்கு எதிராக நின்ற ஒருவரின் ஜாமீன் தொகை பறி முதலாயிற்று. வெற்றிபெற்ற கட்சி அபேட்சகர்கள் வருமாறு:

1. வி. நடேசன், 2. கா. நடராஜன், 3. சு. சின்னையன், 4. மு. சின்னத்தம்பி, 5. ந. சிதம்பரம், 6. அடைக்கன், 7. வீரப்பன்.

### சுவாமிமலை

தஞ்சை ஜில்லா சுவாமிமலை பஞ்சாயத்துத் தேர்தலில் கம்யூனிஸ்ட் கட்சிக் கிளைக் காரியதரிசி தோழர் என். டி. அப்துல் காதர் பலருடைய போட்டிக்கிடையே அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார்.

சுவாமிமலை பஞ்சாயத்தில் ஒரு கம்யூனிஸ்ட் தேர்ந்தெடுக்கப்படுவது இதுவே முதல் தடவையாகும்.

### கிருங்காக்கோட்டை

4–5–58-ல் நடைபெற்ற பஞ்சாயத்துத் தேர்தலில் கீழ்வரும் கம்யூனிஸ்ட் கட்சி மெம்பர்களும், விவசாய சங்க உறுப்பினர்களும் போட்டியின்றி ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

1. ராமநாதன், 2. சீதாராம், 3. நல்ல கருப்பன், 4. சேதுராமன், 5 மருதன் (கம்யூனிஸ்டுகள்), 6. வீரமுத்து, 7. ராமசாமி, 8. முத்து வயிரு அம்பலம், 9. அமரி, 10. சோமசுந்தரம்பிள்ளை, 11. சைதா முகமது லெப்பை, 12. மங்கை பாகன், 13 வைத்தி நாடார் (விவசாய சங்க மெம்பர்கள்), 14. சோலை (ஹரிஜன்), 15. மலையான் (ஹரிஜன்).

தோழர் க. மு. முத்து வயிரு அம்பலம் பஞ்சாயத்துத் தலைவராக ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார்.

### திருமங்கலம்

இங்கு நடைபெற்ற பஞ்சாயத் தேர்தலில் பண பலத்தையும், அரட்டல் மிரட்டல்களையும் எதிர்த்து கம்யூனிஸ்டு அபேட்சகர்கள் வெற்றி பெற்றனர்.

4வது வார்டில், எம். அய்யர் தேவர் (கம்யூனிஸ்ட்) 411 ஓட்டுகள் பெற்று வெற்றியடைந்தார். இவருக்கு அடுத்தபடி குறைந்த ஓட்டுகள் பெற்று தோல்வியடைந்தவர் மொக்கயத் தேவர் 564.

5வது வார்டில் தோழர் எம். சோணை (கம்யூனிஸ்ட்) 130 ஓட்டுகள் பெற்று வெற்றியடைந்தார். எதிர்த்து நின்ற தனுஷ்கோடி (தி. மு. க.) 83 ஓட்டுகளும், மற்றொருவர் (சுப்பையா) 115 ஓட்டுகளும் பெற்றனர்.

### ஆலம்பட்டி

திருமங்கலம் தாலுகா ஆலம்பட்டி கிராமப் பஞ்சாயத்துத் தேர்தலில் கீழ்வரும் விவசாய சங்க அங்கத்தினர்கள் வெற்றிபெற்றுள்ளனர். திருமதி நாச்சாரம்மாள், ம. பெருமாள் நாயக்கர், மாசாண கவுண்டர், கந்தன். திருமதி நாச்சாரம்மாள் பஞ்சாயத்துபோர்டு தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

### மேலக்கோட்டை

பஞ்சாயத்து போர்டு தலைவர் தேர்தலில் கம்யூனிஸ்ட் கட்சி கிளை மெம்பர் தோழர் குருசாமி கவுண்டர் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

### டி. கல்லுப்பட்டி

இங்கு நடைபெற்ற பஞ்சாயத்துத் தேர்தலில் கம்யூனிஸ்ட் கிளைக் காரியதரிசி தோழர் எம். கருப்பையா 4-வது வார்டில் போட்டியில்லாமல் தேர்ந்தெடுக்கப்பட்டார். மேலும் ஆர். குருசாமி, கே. வீரண மூப்பர், என். என். வீரண மூப்பர் ஆகிய கம்யூனிஸ்ட் அனுதாபிகளும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### பெரியபூலாம்பட்டி

நம்மகுடித்தேவர், வெள்ளைச்சாமித் தேவர், வெள்ளை என்ற கருப்புத் தேவர், சங்கையாத் தேவர், சின்னசாமித் தேவர் ஆகிய விவசாய சங்க மெம்பர்கள் தேர்ந்தெடுக்ககப்பட்டனர். நம்மக்குடிதேவர் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

### கொமாரபாளையம் (கோவை)

கொமாரபாளையம் (தெலுங்கு பாளையம்) பஞ்சாயத்துத் தேர்தலில் 15-ல் 8 ஸ்தானங்களில் 5 கம்யூனிஸ்டு, 3 ஆதரவாளர்களும் வெற்றிபெற்றனர்.

கரும்புத் தோட்டங்கள் நிறைந்ததும், சீமான்கள் வசிக்கும் பிரதேசமுமாகிய இங்கு கம்யூனிஸ்ட் கட்சியைத் தோற்கடிப்பதற்காக காங்கிரஸ், தி. மு. க., நிலப்பிரபுக்கள் ஒன்றாகச் சேர்ந்து போட்டியிட்டனர். பலத்த அவதூறுப் பிரசாரம் செய்தும் எதிரிகளின் ஜம்பம் சாயவில்லை.

### வேப்பம்பூண்டி

13-6-58-ல் இங்கு நடைபெற்ற தேர்தலில் தோழர் சி. ஆர். பொன்னுசாமி வர்மா ஏக மனதாக, பஞ்சாயத்து போர்டு தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இந்தப் பஞ்சாயத்துத் தேர்தலில் ஏற்கனவே 4 கம்யூனிஸ்டுகளும், சுயேச்சையாளர்கள், அனுதாபிகள் 6 பேரும் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

## தேசிய நலனை ஒட்டி உடனே சமரசம் செய்க

### கம்யூனிஸ்ட் எம். பி.க்கள் வேண்டுகோள்

கல்கத்தா, ஜூன் 20—

துறைமுகத் தொழிலாளர்களின் குறைந்தபட்ச கோரிக்கைகளை அனுமதித்து உடனடி சமரசம் செய்ய வேண்டும் என்று கோரி கம்யூனிஸ்ட் பார்லிமெண்ட் உறுப்பினர்களான ரேணு சக்ரவர்த்தியும், முகமது இலியாஸும் பிரதமர் நேருவுக்குத் தந்திபடித்துள்ளனர். தேசிய நலனை உத்தேசித்து துரிதமாக சமரசம் செய்ய வேண்டும் என்று கோரியுள்ளனர்.

# கேரளத்தில் புதிய தொழிற்சாலைகள்

## காகிதம், டயர் தொழிற்சாலை நிறுவ வாய்ப்புள்ளது

திருவனந்தபுரம், ஜூன் 17—

மத்தியப் பிரதேச மாகாணத்தைச் சேர்ந்த ஒரு நிலக்கரி சுரங்க காகிதக் கம்பெனி நிர்வாகம் கேரள ராஜ்யத்தில் ஒரு காகிதத் தொழிற்சாலை நிறுவுவது சம்பந்தமாக கேரள சர்க்காருடன் பேச்சு வார்த்தைகள் நடத்தி வருகின்றனர்

காகிதம் உற்பத்தி செய்வதற்கு அவசியமான மூலப் பொருள்களில் முக்கியமான மூங்கில் கேரளத்தில் தாராளமாகக் கிடைக்குமா என்று இக்கம்பெனியார் ஆராய்ந்து வந்தனர். வயநாட்டில் தனியார் காடுகளில் வளர்ந்துள்ள மூங்கில்கள் ஏராளமாக இருப்பதாகத் தெரிந்து திருப்தி யடைந்துள்ளனர்.

இது சம்பந்தமாக இரண்டு பிரதிநிதிகளை கேரளத்திற்கு அனுப்பி வைத்து மேற்கொண்டு நடவடிக்கைகள் எடுக்க இந்த நிர்வாகிகள் முடிவு செய்துள்ளதாகத் தெரிகிறது.

இதே சமயத்தில் பம்பாயிலிருந்து வந்துள்ள ஒரு கம்பெனிக்காரர்கள் இங்கு ஒரு டயர் கம்பெனி நிறுவுவதற்கு விரும்புவதாகத் தெரிவித்துள்ளனர். இந்தத் தொழிற்சாலையின் மூலதனம் இரண்டு கோடி ரூபாய் என்று நிர்ணயிக்கப்படுகிறது. இதில் 40 லட்சம் ரூபாய் சர்க்கார் அளிக்க ஒப்புக்கொண்டிருக்கிறது.

பல்கேரியாவிலிருந்து இங்கு வந்திருந்த ஒரு தூதுகோஷ்டி கேரளத்தில் தொழிற்சாலைகள் தொடங்குவதற்கான வாய்ப்புகளைக் கண்டறிந்திருக்கிறது. இந்த பல தொழிற்சாலைகளை ஆரம்பித்து நடத்த அவர்கள் தயாராக இருப்பதாகவும் கூறப்பட்டது.

பாலக்காட்டில் ஒரு சிறந்த அலுமினியத் தொழிற்சாலை ஆரம்பிப்பது சாத்தியமாம்.

## ஜூன் 25-ல் திருமணம் ஆனால் 16-ல் கைது

சென்னை, ஜூன் 22—

கண்ணன் என்ற ஹார்பர் தொழிலாளிக்கு ஜூன் 25ந் தேதியன்று திருமணம் நடைபெறுவதாக நிச்சயிக்கப்பட்டிருந்தது. ஆனால் அந்தோ! துறைமுகத் தொழிலாளர் வேலைநிறுத்தத்தின் போது அவர் வேடிக்கை பார்பதற்காக ஹார்பர் கேட் அருகி வந்திருந்தார். துப்பாக்கிப்பிரயோகம் நடைபெற்ற அன்று போலீஸ் அந்தத் தொழிலாளியையும் கையப் புடைத்துக் கைது செய்து சிறையிலடைத்துள்ளது.

# சர்வகட்சி விசாரணை வேண்டும்!



தியாகிகள் கோபால், வேதாசலம் சடலங்களுக்கு அஞ்சலி செலுத்த மக்கள் ஆயிரக்கணக்கில் துறைமுகத் தொழிலாளர் சங்கத்தின் முன் அணிவகுத்து நிற்கும் காட்சி.

## துப்பாக்கி ஆட்சிக்கு முடிவுகட்டுவோம்!

## காசிமேடு மயானத்தில் தியாகிகள் பேரால் தலைவர்கள் சபதம்

சென்னை, ஜூன் 21—

"காங்கிரஸ், கம்யூனிஸ்ட், திராவிட முன்னேற்றக் கழகம், திராவிடக் கழகம், சோஷலிஸ்ட் கட்சி, பிரஜா சோஷலிஸ்ட் கட்சி, தமிழரசுக் கழகம் ஆகிய 7 கட்சிகளின் பிரதிநிதிகளைக்கொண்ட ஒரு விசாரணைக்குழு நியமித்து, அதற்கு உயர்நீதி மன்ற நீதிபதியைத் தலைவராகப் போட்டு, சென்னை துறைமுகத் துப்பாக்கிப் பிரயோகம்பற்றி விசாரணை நடத்தப்படவேண்டும். அந்த விசாரணையில் என்ன தீர்ப்புக் கூறினாலும் அதற்குக் கட்டுப்படத் தயார். ஏ. எஸ். கே. அய்யங்காரும், எஸ். சி. சி. அந்தோணிப் பிள்ளையும்தான் இச்சம்பவங்களுக்குப் பொறுப்பு என்று தீர்ப்புக் கிடைக்குமானால், எங்களிருவரையும் கழுவிலேற்றப்படுவதற்கும் சம்மதிக்கிறேன்."

இவ்வாறு, சர்வகட்சி விசாரணை வேண்டுமென்று வற்புறுத்தி, இராயபுரம் காசிமேடு மயானப் பொதுக்கூட்டத்தில் தொழிலாளர் தலைவர் ஏ. எஸ். கே. அய்யங்கார் தெரிவித்தார். கூட்டத்துக்கு போர்ட் டிரஸ்ட் ஊழியர் சங்கத் தலைவர் திரு எஸ். சி. சி. அந்தோணிப் பிள்ளை தலைமை வகித்தார். சுட்டுக் கொல்லப்பட்ட வீரத் தியாகிகளான கோபால், வேதாசலம், எத்திராஜ், நடராஜன் ஆகிய நால்வரின் சடலங்களும், பொதுக்கூட்ட மேடை முன் வரிசையாக வைக்கப்பட்டன. அதைச் சுற்றிலும் செந்தொண்டர்கள் அமர்ந்தார்கள். கூட்டத்துக்கு தலைமை வகிக்கும்படி ஏ. எஸ். கே. அய்யங்கார் திரு அந்தோணிப் பிள்ளையைக் கேட்டுக் கொண்டார்.

### அந்தோணிப் பிள்ளை

தியாகிகளுக்கு அகில இந்திய சம்மேளனம் சார்பாகவும், சோஷலிஸ்ட் கட்சி, மதராஸ் லேபர் யூனியன் சார்பாகவும் வணக்கம் செலுத்தி, தொழிலாளர் தலைவர் எஸ். சி. சி. அந்தோணிப்பிள்ளை பேசுகையில், "இன்று நடைபெற்ற மிகப்பெரிய ஊர்வலமும், 100 தொழிற்சங்கங்கள் வேண்டிக் கொண்டதற்கிணங்க நடைபெற்ற ஹர்த்தாலும், இந்த சர்க்காரின் மிலேச்சத்தனமான அடக்குமுறையை வன்மையாகக் கண்டித்துள்ளன. தொழிலாளி வர்க்கத்தின் சக்தியை இந்தச் சர்க்கார் குறைத்துமதிப்பிட்டு தப்புக்கணக்குப்போட்டுள்ளது. அதனால்தான் கருங்காலிகளைக் கொண்டு வந்து போராட்டத்தை உடைக்க முயற்சிக்கிறது.

இன்றுகூட, நமது ஊர்வலம் வரும்போது போலீஸ்படையினர் துப்பாக்கிகளை ஏந்திப் பிடித்துக் கொண்டு, விரல்களை விசை வளையத்திற்கடியில் வைத்த வண்ணமிருந்தார்கள். இது எதைக்காட்டுகிறது? துப்பாக்கி ஆட்சி இன்னும் தொடரும் என்பதையே காட்டுகிறது. இதை தொழிலாளிகள் அனுமதிக்கமாட்டார்கள்.

இனிமேல் முதலாளிகளுக்கும் சுரண்டலுக்கும் அனுகூலமாக, தொழிலாளிகளை நசுக்க, போலீஸை அனுமதிக்கக்கூடாது என்று எச்சரிப்பதுதான் ஹர்த்தாலும் இந்த ஊர்வலமும்" என்றார்.

### கே. டி. கே. தங்கமணி

அகில இந்திய தொழிற் சங்க காங்கிரஸ் சார்பில் தியாகிகளுக்கு வணக்கம் செலுத்திய தோழர் கே. டி. கே. தங்கமணி பேசுகையில் குறிப்பிட்டதாவது: "இதோ! நம்முன் அமரர்களாக காட்சியளிக்கும் இவ்வீரர்களின் தியாகம் வீண்போகாது. சென்னை நகரை மட்டுமின்றி, தமிழகத்திலும், இந்தியா பூராவுமே, அடுத்தடுத்து தொழிலாளி வர்க்கம் என்ன செய்ய வேண்டுமென்று சிந்திக்க வைத்திருக்கிறது.

1957-ஜனவரியில் வால்பாறை தோட்டத் தொழிலாளர்களில் 4 பேர்களைச் சுட்டுக் கொன்றார்கள். உடனே தமிழ்நாட்டுத் தொழிலாளர்கள் பலமான கண்டன இயக்கத்தை நடத்தாத காரணத்தால், கண்துடைப்பு விசாரணை நடத்தி தொழிற்சங்கத் தலைவர்கள் மீது குற்றம் சுமத்தினார்கள். பின்னர் நீதிபதி விசாரணையில் தலைவர்கள் நிரபராதிகள் என விடுவிக்கப்பட்டார்கள்.

பிறகு முதுகுளத்தூரிலும் சுட்டுப் படுகொலை செய்தார்கள். என்றாலும் எதிர்ப்பு இயக்கம் போதிய அளவு இல்லை. அந்த தெம்பினால்தான் தலைநகரிலேயே துப்பாக்கியை நீட்டியிருக்கிறார்கள். இன்று தொழிலாளிகளும், பொதுமக்களும் கண் விழித்து விட்டார்கள். தொழிலாளிகளின் இரத்தத்தைச் சுலபமாகக் குடித்து, கும்மாளம் போட்ட காலம் மலையேறி விட்டது. நடக்கவிருக்கும் விசாரணை பொது ஜன தலைவர்கள் கொண்ட விசாரணையாக இருக்க வேண்டும்.

மதுரை மில் தொழிலாளியாக இருந்த பாலு, தூக்குமேடை ஏறுமுன், "தொழிலாளி வர்க்க ஒற்றுமை ஓங்குக!" என்றார். அது இன்று பலித்தது. பலதரப்பட்ட கருத்து வேற்றுமைகள் கொண்ட தொழிற்சங்கத் தலைவர்களை, இதோ இந்த வீரர்களின் தியாகம் ஒன்று படுத்தியுள்ளது" என்றார்.

### ஜி. லெட்சுமணன்

அகில இந்திய தபால்-தந்தி ஊழியர் சம்மேளனம் சார்பில் வணக்கம் செலுத்தி திரு. ஜி. லெட்சுமணன் அவர்கள் பேசியதாவது:

"இந்த சர்க்கார் எதற்கெடுத்தாலும் துப்பாக்கியை நீட்டுகிற சர்க்கார் வால்பாறையிலும் சென்னையிலும் மட்டுமல்ல, ஜாம்ஷெட்பூரிலும் தொழிலாளிகள் மீது துப்பாக்கியைநீட்டியுள்ளது. சகல தொழிற்சங்கங்களும் ஒன்று சேர்ந்து சர்க்காரின் காட்டுமிராண்டித்தனத்துக்கு பதில் தர வேண்டும். எங்கள் போராட்டத்தின்போதும் கறுப்பு மசோதாவைக் கொண்டுவந்த சர்க்கார் இது" என்று குறிப்பிட்டார்.

### மோஹன் குமாரமங்கலம்

தோழர் மோஹன் குமாரமங்கலம் தியாகிகளுக்கு வணக்கம் செலுத்திவிட்டு பேசியதாவது: "சுதந்திரப் போராட்டம் நடந்தபோது, அதை நசுக்க பிரிட்டிஷார் துப்பாக்கியை உபயோகித்தார்கள். அதேபோல, தொழிலாளிகள் நல்வாழ்வுப் போராட்டம் நடத்துகிறபோது, அதை நசுக்குவதற்காக காங்கிரஸ் சர்க்கார் துப்பாக்கிப் பிரயோகம் செய்கிறது. பிரிட்டிஷாரும் தோற்றனர். தேசம் விடுதலை அடைந்தது. அதேபோல, காங்கிரஸ் ஆட்சியும் தோற்கும். தொழிலாளிகள் வெற்றிபெறுவார்கள்.

காங்கிரஸ் ஆட்சியை ஒழித்துக்கட்ட அதன் சொரூபத்தை அம்பலமாக்கவேண்டும். ஜூன் 24-ம் தேதி முதல் நடைபெறும் விசாரணையில் யார் யார் 16-ம் தேதி சம்பவத்தில் என்னென்ன பார்த்தார்களோ, அதை அப்படியே கூட்டாமல் குறைக்காமல் நீதிபதி முன் சொல்லுங்கள்" என்றார்.

### அப்பன்ராஜு

சோஷலிஸ்ட் தலைவர் திரு. அப்பன்ராஜு பேசுகையில், "இது முன்கூட்டியே திட்டமிடப்பட்டு செய்த படுகொலையாகும். விருதுநகரிலிருந்துங்கூட கருங்காலிகளை இறக்குமதி செய்திருக்கிறார்கள்.

பிரேதம் கொடுக்க 5 நாள் ஆனதற்குக் காரணம், முதுகுளத்தூர்ப் போல ஜோடனை செய்ய முயற்சிகள் நடந்ததோ என்னவோ என்று சந்தேகிக்கிறேன்" என்றார்.

### பி. ராமமூர்த்தி

கம்யூனிஸ்ட் தலைவர் பி. ராமமூர்த்தி பேசுகையில், "இதோ! இந்த தியாகிகள் இன்றைய சமுதாயத்தில் கருதப்படும் "பெரிய மனிதர்" வரிசையில் சேர்ந்தவர்களுமல்ல, தலைவர்களுமல்ல சாதாரண தொழிலாளிகள் என்றாலும் ஜனசமுத்திரம் திரண்டு வந்து இவர்களுக்கு மரியாதை செலுத்துவது ஏன்? ஒரு இயக்கத்தில், அதுவும் சமுதாயம் முழுவதும் விமோசனம் அடைய வேண்டுமென்றதொரு புனிதப் போராட்டத்தில் உயிர் நீத்தார்கள் என்பதற்காகவே மக்கள் மரியாதை செய்கிறார்கள்.

இவர்களை போலீஸ் சுட்டது வாஸ்தவம்தான். ஆனால் இவர்கள் கொலையுண்டதற்குக் காரணம் போலீஸ் அல்ல. காங்கிரஸ் மந்திரிசபைதான், இக்கொலைக்குப் பொறுப்பை ஏற்க வேண்டும்.

வால்பாறையில் சுட்டார்கள். தொழிற்சங்கத் தலைவர்கள் மீதுதான் குற்றமென்று அதிகாரி விசாரணை தீர்ப்பளித்தாலும், நீதிபதிவிசாரணையில்தலைவர்கள்குற்றவாளிகள் அல்ல. சப் இன்ஸ்பெக்டர்தான் குற்றவாளி என்றார். உடனே மந்திரிசபை என்ன செய்திருக்கவேண்டும்? சுடுவதற்கு உத்திரவிட்ட சப் இன்ஸ்பெக்டரை டிஸ்மிஸ் செய்து, அதற்கு மேல் அவர்மீது கொலைக் குற்றமும் சாட்டி தண்டித்திருக்கவேண்டும். இப்படிச் செய்திருந்தால், மற்ற இடங்களில் துப்பாக்கிப் பிரயோகம் செய்ய அதிகாரிகள் பயப்படுவார்கள்.

ஆனால், சுட்ட அதிகாரிகளுக்கு சபாஷ் சொல்லி, பதவி உயர்வு தந்து கௌரவிக்கிற காரணத்தால், மேலும் மேலும் துணிச்சல் வந்து, தொழிலாளி வர்க்கத்தைக் கிள்ளுக்கீரையாகக் கருதி சுட்டுத் தள்ளுகிறார்கள்.

துப்பாக்கியைக் கண்டு அஞ்சக்கூடிய பேடிகள் தொழிலாளிவர்க்கம் அல்ல. அவர்களின் ஒற்றுமை போராட்டமும் துப்பாக்கி ஆட்சிக்கு ஓர் முடிவு கட்டும் என்றார்.

### ஏ. எஸ். கே. அய்யங்கார்

இறுதியாக, தியாகமூர்த்திகளுக்கு வணக்கம் செலுத்தி ஏ. எஸ். கே. அய்யங்கார் பேசினார். அவர் பேசுகையில்: "இன்று பொங்கி எழுந்த தொழிலாளிவர்க்க சக்தியின் பலத்தை போலீஸ் கமிஷனர் அருள், கிள்ளுக்கிரையாக நினைக்க வேண்டாம். பத்தாயிரம், இருபதாயிரம் தொழிலாளர்களின் தலைவர்களை துச்சமாகக் கருதி, தன்னையும் தான் சேவகம் செய்யும் சுரண்டல் வர்க்கத்தையும் பெரிதாக நினைக்க வேண்டாம்" என்று கடுமையாக எச்சரித்தார்.

பின்னர் தொண்டர்களும் தொழிலாளர்களும் புடைசூழ, தலைவர்கள் வணக்கம் செலுத்த தியாகிகளின் சடலங்கள், தியாகிகள் நாமம் வாழ்க என்று ஒலிகளுடன் இரவு 11 மணிக்கு அடக்கம் செய்யப்பட்டன.

## பம்பாய் நகரசுத்தி ஊழியர்களின் முடிவு

பம்பாய், ஜூன் 19—

சம்யுக்த மகாராஷ்ட்ர சமிதியின் வேண்டுகோளின்படி, பம்பாய் கார்ப்பொரேஷன் அளிக்கும் சலுகையை ஏற்றுக்கொண்டு, வேலைக்குத் திரும்புவதென்று 12,000 அங்கத்தினர்களை உடைய பம்பாய் ஸ்வீப்பர்கள் சங்கம் முடிவு செய்துள்ளது.

ரூ. 50-ம் அதற்குக் குறைவாகவும் அடிப்படைச் சம்பளம் பெறுபவர்களுக்கு சம்பளத்தில் ரூ. 5 உயர்வு தருவதாகக் கார்ப்பொரேஷன் ஏற்கனவே கூறியிருந்தது.

ரூ. 50 முதல் 100 வரை சம்பளம் பெறுவோருக்கு ரூ. 3-ம், 100 முதல் ரூ. 150 வரை சம்பளம் பெறுவோருக்கு ரூ 2-ம் சம்பள உயர்வு தருவதாகக் கார்ப்பொரேஷன் கூறியது.

ஆனால் தொழிற்சங்கத்தின் சோஷலிஸ்ட் தலைமை இந்த ஏற்பாட்டை நிராகரித்து, எல்லோருக்கும் ரூ 5, பஞ்சப்படி உயர்வுதான் வேண்டுமென்று பிடிவாதம் பிடித்து வேலை நிறுத்தத்தை நீடிக்கிறது.

வேலைக்குத் திரும்பிய 12,000 பேர்போக இன்னும் சுமார் 18,000 பேர் ஸ்ட்ரைக்கில் ஈடுபட்டுள்ளனர்.

இந்நிலையில் தொழிலாளிகளிடம் நேரடியாகச் சென்று தங்கள் நிலையை விளக்கி, தொழிலாளிகளை வேலைக்குத் திரும்பும்படி கேட்டுக்கொள்வதென்று சம்யுக்த மகாராஷ்ட்ர சமிதிகவுன்சிலர்கள் முடிவு செய்துள்ளனர்.

## ஹங்கேரிய நாட்டு உள் விவகாரமும் ஏகாதிபத்தியவாதிகளின் சதிகளும்

மாஸ்கோ, ஜூன் 18—

ஹங்கேரிய சோஷலிஸ்டு ஆட்சியைக் கவிழ்க்கச் செய்த முயற்சியில் ஈடுபட்ட நாகி ஆகியோர் கைது செய்யப்பட்டிருந்தார்களல்லவா? அவர்கள் விசாரணை செய்யப்பட்டு அன்னிய ஏகாதிபத்தியங்களின் கையாளாக இருந்து, தேசத்திற்குத் துரோகம் செய்து, ஆயுதந் தாங்கிய கலகத்தை ஹங்கேரிய சோஷலிஸ்டு ஆட்சிக்கு எதிராகக் கிளப்பி விட்டார்கள் என்று குற்றம் சாட்டப்பட்டு நிரூபிக்கப்பட்டு அந்தத் தேசத் துரோகிகளுக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது என்று ஹங்கேரிய அரசாங்கம் அறிவித்துள்ளது.

இந்தச் செய்தி வெளிவந்தவுடன் மேற்கத்திய ஏகாதிபத்திய நாடுகளின் தலைவர்களான ஐஸன்ஹோவர், டல்லஸ், மாக்மில்லன் ஆகியோர் கண்ணீர் வடித்த வண்ணமிருக்கின்றனர். இந்த சம்பவத்தை உபயோகித்துக் கொண்டு சமாதான மாநாடு நடத்துவதைத் தடுக்க முயற்சி செய்கின்றனர் என்று 'டாஸ்' செய்தி ஸ்தாபனம் கூறுகிறது.

இது குறித்து சோவியத் செய்தி ஸ்தாபனமான டாஸ் கீழ்வரும்விதம் பதில் கூறுகிறது:-

"ஹங்கேரிய எதிர்ப் புரட்சியாளரைக் கண்டு பிடித்து, அவர்கள் ஏகாதிபத்தியவாதிகளின் ஏஜெண்டுகளாக இருந்ததை அம்பலப்படுத்தி அவர்களுக்கு ஒரு முடிவு கட்டப்பட்டுள்ளது. இந்த சம்பவத்தை உபயோகித்து சோஷலிஸ நாடுகளுடன் கொண்டுள்ள உறவை மோசமாக்கவும் உச்சகட்ட மாநாடு நடத்துவதற்குத் தடை செய்யவும் உபயோகப்படுத்த ஏகாதிபத்தியவாதிகள் முன் வந்துள்ளார்கள்.

### இன ஒதுக்கலை எதிர்த்து

#### தென் ஆப்பிரிக்காவில் ஹர்த்தால்

கேப்டவுன், ஜூன் 20—

தென்னாப்பிரிக்காவில் இன வெறி அடிப்படையில் இந்தியர் ஆப்பிரிக்க மக்களை ஒதுக்கி நகரப்புறத்தை விட்டு வெளியேற்றச் சட்டம் இயற்றப்பட்டுள்ளது. டர்பன் பகுதியில் மட்டும் இதன் விளைவாக 1 லட்சம் ஆப்பிரிக்கர்களும் ஐம்பதாயிரம் இந்தியர்களும் வெளியேற்றப்படுவர்.

இந்த அநீதியை ஆட்சேபித்து ஜூன் 23-ந் தேதி ஹர்த்தால் அனுஷ்டிக்கும்படி தென்னாப்பிரிக்க இந்தியக் காங்கிரஸ் தலைவர் டாக்டர் ஜி. எம். நாய்க்கர் அறைகூவல் விடுத்துள்ளார். சர்க்காரின் இந்த வெறிச் சட்டத்தை எதிர்த்து மக்கள் ஒன்று சேர்ந்து வந்து போராட வேண்டும் என்று அவர் கேட்டுக் கொண்டிருக்கிறார்.

### மஹா குஜராத் போராட்டம்

பரோடா, ஜூன் 21—

குஜராத்தி மொழி பேசும் பகுதிகளில் மொழிவழி மஹா குஜராத் ராஜ்யம் அமைக்கப்பட வேண்டும். இதற்காக சட்டபூர்வமாகவும், கிளர்ச்சியின் அடிப்படையிலும் இயக்கம் நடத்துவோம் என்று இங்கு நடைபெற்ற மஹா குஜராத் ஜனதா பரிஷத்தின் மத்திய நிர்வாகக் குழு முடிவு செய்திருக்கிறது.

Printed & Published by S. Krishnaswamy at Janasakthi Press, 32, Broadway, Madras-1. Editor: P. JEEVANANDAM.